SRI MOHAMED RAZA KHAN : I rise on a point of order, Sir. I want a ruling from the Chair on a very important matter. I want to know whether the Ghairman himself who is also connected with this matter, can occupy the Chair and give the ruling. If the Chairman is not ready to give a ruling, he should allow me some more time to-morrow at least, so that I may bring authorities to show that where the Chairman is directly interested in the matter, he should vacate the Chair and allow any other member who is not connected with it to give a ruling. I do not in any way dispute your ruling, Sir. It may be perfect as far as the legal side is concerned. We have to satisfy the public also.

MR. CHAIRMAN : There is no question of the public being satisfied. It is not a matter where I am concerned or any other member is concerned directly. It is a question of delimitation of constituencies. I have given the constitutional aspect, and ruled the motion out of order.

SRI MOHAMED RAZA KHAN : May I make a statement?

MR. CHAIRMAN : No. There can be no discussion on the ruling.

SRI MOHAMED RAZA KHAN : I am sorry, Sir.

## IV. GOVERNMENT BUSINESS.

### DISCUSSION ON THE STATE ELECTRICITY BOARD BUDGET FOR 1961–62—*cont.*

MR. CHAIRMAN : Now we will continue the discussion on the Electricity Board Budget. Sri A. K. Thangavel Mudaliar will speak.

* SRI A. K. THANGAVEL MUDALIAR : தலைவரவர்களே, மின்சார வரவுசெலவுத் திட்டத்தைப்பற்றி, நம் தமிழ்நாட்டில் மின்சார போர்டு திட்டம் போட்டு காரியங்கள் செய்து வருவதில் நம் நாட்டிலே உள்ள இதர மாகாணங்களிலே உள்ளவர்களும் வெளிநாட்டவர்களும் பெருமைப்படக்கூடிய வகையில் பேசப்பட்டு வருகிறது. இதற்கு எல்லாம் முக்கியமான காரணம் காரியத்தை எடுத்துச் செய்யும் தலைவர்களின் திறமை தான் என்று சொல்லவேண்டும். காரியங்களைச் செய்வது திறமையாக இருந்தாலும் போர்டின் மனப்பான்மை இருக்கிறதே, அது லாபத்தைச் சம்பாதிக்கிறதாகத்தான் இருக்கிறது. பார்டிகளிடத்திலே, ஜனங்களிடத்திலே அதிகப்பணம் வாங்குகிறது. மின்சாரத்தினால் ரொம்ப சௌகரியம் என்று பெருமையாகப் பேசுகிறார்கள். அதனால் நமக்கு என்ன லாபம்? நமக்கு நஷ்டம்தான். போர்டின் மனப்பான்மை எப்படி இருக்கிறது என்றால், பொதுவாக அதிகப்பணம் வசூல் பண்ண வேண்டும். அதனாலே யாருக்கு நஷ்டம்? யார் கிட்டே வாங்குகிறது என்று தெரிந்துகொள்ளவில்லை. பணக்காரர்களிடம் பெரிய ஆட்களிடம் வாங்கலாம்.

23rd August 1961] [Sri A. K. Thangavel Mudaliar]

விவசாயிகளிடம் அதிகமாக கரண்ட் சார்ஜ் வாங்குவது எப்படி முடியும்? எதைப் பார்த்தாலும் லாபத்தைச் சம்பாதிப்பது என்று இருக்கிறது. எதிலே சம்பாதிப்பது, எதிலே குறைத்துக் கொடுப்பது என்று இல்லை. ஒரு வருஷத்துக்கு முன்னாலே 100 ரூபாய் கொடுத்து வாங்கிய கரண்டை இப்போது 150 ரூபாய்க்கு வாங்க வேண்டியிருக்கிறது. முன்னாலே முக்காலணாவாக இருந்தது. இப்போது 7 நயாபைசா—14 தம்பிடி. 1-க்கு 1½ பங்குக்கு மேலேயாகி விட்டது. சார்ஜைச் சொல்லுகிறேன். சர் சார்ஜைச் சொல்லவில்லை. பொதுவாக விவசாயிகளுக்கு தண்ணீருக்குப் பணம் கொடுத்து விவசாயம் செய்கிறவர்கள் இருக்கிறார்கள் பாருங்கள். புஞ்சையில் நெல் பயிர் பண்ணுகிறவர் களுக்குக் கட்டுபடியாகாது. யாருக்கு லாபம்? தண்ணீர் வசதி இருக்க வேண்டும், நஞ்சையாக இருக்க வேண்டும், தண்ணீர் வர வேண்டும், அப்படிப்பட்டவர்கள் நெல் பயிர் பண்ணினால் தான் லாபம். சதாகாலமும் தண்ணீர் அடித்து பயிர் பண்ணினால், கணக்குப்போட்டுப் பார்த்தால் நஷ்டம்தான், அந்த மாதிரி ஆட்களுக்கு கரண்ட் சார்ஜைக் குறைத்துக் கொடுக்கவேண்டும். பிச்சைக்காரர்களில் யார் பசியாக இருக்கிறானோ அவனுக்குக் கொடுக்க வேண்டும். அந்தமாதிரிப்பார்த்து செய்ய வேண்டும் சர்க்கார். அந்தமாதிரித் திட்டத்தைத் தயார் பண்ண வேண்டும். 3·30 p.m.

அடுத்தபடியாக, விவசாயிகள் கட்டுகிற டெபாசிட் தொகை திரும்பி வரப்போகிறதே கிடையாது. அதற்கு இன்டெரஸ்டும் கொடுக்கிறதில்லை. 3 பெர்சென்ட் சேவிங்ஸிலே வரும் என்று சொல்லுகிறார்கள். நமக்கு எங்கே வருகிறது? வெளியே 5½ பெர் சென்ட் வட்டிக்கு போர்டு கடன் வாங்குகிறது. விவசாயிகள் கட்டியிருக்கிற பணத்துக்கு 5 பெர்சென்ட் வட்டி கொடுக்கலாம் என்பது என் அபிப்பிராயம். வருஷா வருஷம் கன்சூமர் கணக்கில் டிபாஸிட் வட்டியை வரவு வைத்துவிட்டால் சரியாக இருக்கும். முன்னால் எல்லாம் ஒரு மாதம் கரண்டு சார்ஜ்தான் அட்வான்சாக வாங்குவது வழக்கம். இப்போது மூன்று மாதத்திற்கு கேட் கிறார்கள். அந்தமாதிரி விவசாயிகளைக் கேட்கிறது விவசாயி களுக்கு இடைஞ்சலாக இருக்கிறது. டிரான்ஸ்பார்மரில் 50 ஹார்ஸ் பவர் இருந்தால், 75 ஹார்ஸ்பவர் கரண்டு மோட்டார்களுக்கு கொடுத்து விடுவார்கள். அதனாலே என்ன ஆகிறது என்றால் கரண்ட் குறைந்த வோல்டில் போகிறது. அதன்கீழ் ஓடுகிற மோட்டார்கள் எரிந்து போய் விடுகிறது. டிபார்ட்மெண்டுக்கு லாபம் வருகிறது. கடைசியில் விவசாயிக்கு முதல் போய் விடுகிறது. இந்த மாதிரிக் கண்டிப்பாகக் கொடுக்கக்கூடாது. இன்றைய வரையிலும் மேட்டூர் டாமில் நிறையத் தண்ணீர் வந்து ஓடிக்கொண்டிருக்கிறது. இன்னும் 'கட்-ஐ எடுக்கவில்லை. அப்படியேதான் இருக்கிறது. கரண்ட் 'கட்டை' மேட்டூர் டாமில் தண்ணீர் வந்தால், எடுத்து விடலாம் என்று சொல்லி வந்தார்கள். தண்ணீர் வந்து தஞ்சாவூரே போய்விட்டது. இன்னும் 'கட்' அப்படியே இருக்கிறது.

[Sri A. K. Thangavel Mudaliar] [23rd August 1961

காஞ்சீபுரம் தாலுக்காவில் பரந்தூர் பகுதியில் 58 கிராமங்களில் 12 கிராமங்களில்தான் லேட். அதேமாதிரித்தான் காஞ்சீபுரம் ரூரல் ஏரியாவிலும். அநேக ஊர்களுக்கு இல்லை. 500 அடியில் கம்பம், பம்ப் செட் இருக்கிறது. எதிரிலிருக்கும் திம்ம சமுத்திரத்தில் இன்னும் கரண்ட் கிடைக்கவில்லை. இரண்டு வருஷமாகக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

இந்த போர்டு லாபநஷ்டத்தில் வேலை செய்கிறதா என்ற கணக்குத் தெரியவில்லை. இந்த பட்ஜெட்டில் காண்டு மொத்தம் எவ்வளவு விற்றோம், எவ்வளவு லாபம் என்று தெரியவில்லை. நமக்குத் தெரிகிறாற்போல தமிழில் போட்டு, கணக்கையும் சரியாகக் காண்பித்தால், லாபமா நஷ்டமா என்று தெரியும். எப்படிக் கண்டுபிடிக்கிறது என்று தெரியவில்லை. தெரிந்தவர்களைக் கேட்டுப்பார்த்தால், அவர்களுக்கும் சொல்லத் தெரியவில்லை. அந்த மாதிரி சங்கடத்தில் இருக்கிறது. அடுத்த தடவை பட்ஜெட்டை தெளிவாகத் தெரியும்படி தமிழில், இங்கிலீஷில் போட்டால்கூட நல்லது. கூட்டுறவு சங்கங்களில் நடக்கிறது போலச் செய்யவேண்டும். ஸ்கீம் போட்டு நடத்தினால், சாமான்களை மூலதனத்தில் சேர்த்து வைத்துக் கொள்ளுங்கள். வாங்கினேன், கொடுத்தேன், இவ்வளவு லாபம், அந்தக் கணக்கு சொல்லுவதில் என்ன கஷ்டம்? போன வருஷம் சீப் எலக்ட்ரிகல் எஞ்சினியரைக் கேட்டோம். போர்டு லாபத்தில் 'ஒர்க்' பண்ணுகிறதா என்று குமாஸ்தாக்கள் எல்லோருக்கும் தாராளமாகக் கொடுத்து இருக்கிறோம். அதனால் மிச்சம் கொஞ்சம்தான் என்று சொல்லியிருக்கிறார். இந்த வருஷம் என்ன லாபம் என்று தெரியவில்லை. இருக்கிற குறைகளைச் சொன்னேன். விவசாயிகளுக்குப் பெரும்பாலும் தொந்தரவாகத்தான் இருக்கிறது. மேலே இருக்கிற அதிகாரிகளைப்பற்றியோ போர்டில் இருக்கிறவர்களைப்பற்றியோ குறை இல்லை. கீழே இருக்கிறவர்களின் தொந்தரவு பியூஸ் போடுகிறவர்கள்—எல்லாம் மாமூலில் இருக்கிறது. மாமூல் இல்லாமல் ஒன்றும் நடக்கவில்லை. ஏ.இ.டி. இயைப்பற்றிச் சொல்ல வேண்டாம் அதற்குக் கீழே உள்ள லெவல். நானே 14 பம்ப்செட் வைத்து ஓட்டுகிறேன். மாதம் 1,200, 1,400 கட்டுகிறேன். 10, 5 ஹார்ஸ் பவர். எல்லாம் புஞ்சை. நஞ்சை இல்லை. அவ்வளவிலும் நெல்தான் பயிர் பண்ணுகிறேன். அந்த வரவு செலவு தெரியும்.

THE HON. SRI V. RAMAIAH: புஞ்சையை நஞ்சையாக யாக ஆக்கியது மின்சாரம்.

*SRI A. K. THANGAVEL MUDALIAR: நான்தான் ஆக்கினேன். நிறையத் தொந்தரவு. ஒரு கனெக்ஷன் கேட்டால், கீழே இருக்கிறவர்கள், "கம்பம் நட்டாச்சு, சாமான் இல்லை" என்று சொல்கிறார்கள். அப்படிச் சொல்லியே 1, 2 வருஷம் கால தாமதம் பண்ணினால், பார்ட்டி என்ன பண்ணுவான்? ஏன் எக்ரிமெண்டு வாங்குகிறார்கள்? எல்லா சாமானும் தயாராய் வைத்திருக்க வேண்டாமா? பம்ப் செட் வாங்கிவைத்து கட்டடம் கட்டி

23rd August 1961] [Sri A. K. Thangavel Mudaliar]

யாச்சு என்ருல், உடனே கனெக்ஷன் கொடுக்கவேண்டும். யார் மேலே தப்பு, சாமான் இல்லை என்ருல்? விவசாயிகளுக்கு அனுகூலமாக சுளுவாகச்செய்து, அவர்களுக்கு ஆசையாக இருக்க வேண்டும் கரண்ட் எடுத்துத் தொழில் பண்ண. அப்படிப்பட்ட ஆசையை உண்டு பண்ணும்படி கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

* SRI S. K. SAMBANDHAN : Mr. Chairman, Sir, it really makes us feel a sense of pride when we go through the note circulated by the Hon. Minister detailing the achievements of the Board. In the matter of electricity, there has been all-round progress, especially in the field of rural electrification for purposes of agriculture. This extension of electricity to the rural parts has given a great impetus to the agriculturists to produce more. As the Hon. Minister said, no doubt more than a lakh of pumpsets have been given connections during the Second Five-Year Plan period. But I doubt whether all these people who got the service connection would have got it without undergoing any difficulty. That is the only thing I would like to bring to the notice of the Hon. Minister. Indeed it is a very commendable work that has been done by the Chief Engineer and his colleagues in the matter of development of electricity in this State. But I do not know whether they have got the same ability in the administrative and executive work. When I say this, I say this from personal experience as well as the experience of my friends, in getting service connections for agricultural purposes mainly. It takes a very long time for the agriculturists to get the service connections. Not only that he has to spend a lot of time going to the Supervisor or to the Assistant Engineer and again to the Divisional Engineer before he could get the service connection. This is so on account of the negligence on the part of the officers in the lower grades, especially people below the rank of the Supervisors. This negligence of their duty and red-tapism sometimes leads to corruption also. And these things stand in the way of the agriculturists in getting their connections quickly. Government should look into this and if they give power to the villagers, the villagers should be enabled to get it without any difficulty.

With regard to the minimum guarantee, so many hon. Members have said that it is still too much. I would like to know from the Hon. Minister, when replying to this discussion, how many defalcations have taken place in the past two years in respect of this minimum guarantees that have been taken by the Government from the consumers. If there have been a number of defalcations, I can understand this insistence on a minimum guarantee. But if such cases are only a few, say, a hundred or two hundred, I would like to know why there should be this minimum guarantee at all.

THE HON. SRI V. RAMAIAH : What is the relationship between the minimum guarantee and the defalcations? I would like to know.

SRI S. K. SAMBANDHAN: I would like to know from the Government whether the purpose for which this minimum guarantee was taken has been achieved. For instance, if a consumer wants to have electricity supply, the Government want him to state whether he could consume regularly a stated quantity of power for so many months or years. The party, when he asks for connection, states that he would consume so much minimum quantity of power. I would like to know from the Government how many cases of deflections have come to their notice. That is, in how many cases the consumers have kept up to the guaranteed minimum and in how many cases they have not even reached the minimum guaranteed consumption. I would like to know from the Hon. Minister whether he can give information about this. My point was if there were only a few cases where the consumption had fallen below the minimum guarantee, there was no necessity to insist on this minimum guarantee.

Then, Sir, there is a lot of delay in replacing materials, even ordinary materials like bulbs in municipal areas and panchayats. I have my own personal experience in respect of this in my panchayat. For months together I have written D.O. letters to the Divisional Engineer to get some bulbs replaced. But nothing has happened. When we approach the authorities, they say they have no stock, but when we go to the higher authorities, they say they have plenty of stock. But in actuality nothing happens. There are complaints from so many people that for want of stores these ordinary things are not attended to. For instance, recently the replacement of ordinary bulbs by 2 feet tube lights was sanctioned by the Divisional Engineer, Cuddalore, for my panchayat. In the
3-40 p.m. panchayat we requested, by a resolution, the Divisional Officer a year back, to take up this work. He has sanctioned the work and, only a few weeks ago, the two-feet lights have come. Still they have not fitted them up. I asked for the reason. They said that they wanted some service wires or some other material, and for this reason the work was delayed. I do not know why the tube lights alone should have been sent for first without the other things necessary for giving the service connection to the bulbs. Such things should also be avoided by the department.

In the South Arcot district we do not know whether we have the licensee or the Government running the electricity department, because more often in the industrial loads we find a sudden drop in the voltage. Every now and then—more or less a dozen times in a week—this occurs. I have myself seen in a particular week some months back this drop in voltage. This has affected, as the Hon. Minister is aware, not only the industrial machinery but also small refrigerators in hotels. The reason for this drop in voltage should be found out and the mistake rectified. Otherwise, simply by giving electricity to the consumers or to the industries, we are making them lose more money by making their machinery unworkable due to the failure of the voltage. The Government should examine this position every now and then. This has happened a

23rd August 1961] [Sri S. K. Sambandhan]

number of times especially in the South Arcot district. I do not know whether the old service wires or the transmission wires have been replaced. I heard that the same service wires given to an individual when the licensee gave him the first connection are still there. Whenever there is a slight drizzle, the fuse goes, and he has to telephone to the department to put up the fuse again. For two or three days the fuse is not put in, and the workmen have to be idling for want of the fuse. Such things should be replaced at least periodically. This the department should examine.

In reply to a supplementary question with regard to the Cuddalore Municipality, the Hon. Minister wanted notice of a separate question. With regard to the Cuddalore Municipality, I want to state that the municipality applied for extension of electricity to a hamlet farther away from the municipal area. I think the department sanctioned it two years ago. But the want of a tower across a backwater stream has held up this work for two years. This is not fair. Further, that village is far off, and it is very difficult even for the law and order people to reach that place quickly in times of need. The construction of a tower would not cost much to the department. Such small things should not take two or three years. This delay can be avoided.

The Hon. Minister himself has stated, while initiating the discussion of the Electricity Board budget, that at the end of the Third Plan, we might be faced with a shortage in power, and he said that that there was no reason to be scared. Anyhow, there will be a shortage. He was confident enough to say that he would be having the atomic energy plant. I do not know whether the Hon. Minister is aware of the prevalent rates in other States in India itself or in other countries. In my opinion, we in the Madras State are paying a higher rate than many of the States and also many of the neighbouring countries who are depending mainly on thermal stations, which are worked on imported coal or imported fuel oil. I am prepared to give to the Hon. Minister an instance of a country with which he is fully familiar, namely, Malaya. In Malaya they produce power from only thermal stations using imported fuel oil. There the average sale price to the consumer is only 9.5 cents. It comes to 14 pice. The Hon. Minister is well aware of the establishment charge and other charges there. Even the pay scales from the Chief Engineer down to the workmen or the linemen are much higher—three or four times higher—than what we are paying in our State.

THE HON. SRI V. RAMAIAH : Fourteen pice is the production price.

SRI S. K. SAMBANDHAN : Fourteen pice is the average sale price. It is the consumer price. They have given data here for so many things, and I am able to find out the average price here. It may not be cheap there when compared to the cost of living. The Hon. Minister should bear in mind that they work on fuel oil and

not on hydro-electric system. We are going to work on the lignite that is being dug in our own State. When we get the atomic energy, will it be possible for the Government to give electricity at a cheaper rate or at a higher rate? I want to know this from the Government. If it is to cost us more, it would be better we go in for two more thermal stations than have an atomic energy plant.

SRI O. P. RAMASWAMI REDDIAR : It would be costlier.

SRI S. K. SAMBANDHAN : The establishment of an atomic plant is costly, and the maintenance of it will be very costly. When this comes to our State, the consumers will have to pay much more. Even now I say they are paying more. Why should we go in for a thing that will cost us more definitely? Is it not feasible to go in for one or more thermal stations that will work on lignite or on coal that we get from Calcutta before we think of atomic plant.

Sir, these are the points I want to tell the Hon. Minister. I request him to direct the department to avoid this red-tapism and the delay in the sanction of works. I have got instances to show that service connections for agricultural purposes have not been given for two years. The Hon. Minister should do something here. Thank you, Sir.

3-50 p.m. * SRI A. SUBRAMANYAM : கனம் தலைவர் அவர்களே, தமிழ்நாட்டு மின் சக்தி அமைச்சர் அவர்களால் சமர்ப்பிக்கப் பட்ட மின்சக்தி குழுவின் வரவுசெலவுத் திட்டத்தை நான் முழு மனதுடன் வரவேற்கிறேன். இதற்காக கனம் அமைச்சர் அவர் களுடைய சேவையைப் பாராட்டி நான் புகழ்கிறேன். ஏனெனில் இந்தப் பரந்த பாரத தேசத்திலேயே நல்ல ஒரு திட்டத்தை மின் சக்திக்காகப் போட்டு அந்த மின் சக்தியைவிட அதிக விரைவிலே அமைச்சர் அவர்கள் கிராமங்களுக்குச் சென்று அதிகமான தன் சக்தியைக் கொடுத்திருக்கிறார் என்பதைக் கேட்டு நாமெல்லோரும் பெருமகிழ்ச்சியடையாமல் இருக்கமுடியாது. பல ஆண்டுகளுக்கு முன்பு நம் தேசத்திலுள்ள கவிவாணர்களும் இன்னும் மற்றவர்களும் கிராமங்களில் இரவில் கட்டிலில் படுத்துக்கொண்டு அண்ணாந்து வானத்தை நோக்கி இந்த நட்சத்திரங்களையும் நிலவையும் பார்த்து விட்டு அவை மின்னுகிற ஒளியும் நிலவின் வெளிச்சத்தையும் பாருங்கள் என்று கவிதையிலே குறிப்பிட்டு எழுதி வியந்தார்கள். கற்பனையிலே அதைக் கண்டு பாடல்கள் புனைந்து பாடி வந்தார்கள். ஆனால் இன்றையதினம் ஒவ்வொரு கிராமத்தையும் நினைக்கும் போது ,அம்மாதிரியான ஒரு கற்பனையாக இருந்ததெல்லாம் மறைந்து வீதிகளிலெல்லாம் கிராமங்களிலெல்லாம் ஜகஜ்ஜோதி யாக ஜொலிக்கிறது. பெரிய டியூப் விளக்குகள், சந்திரன் போன்ற வட்டவடிவமான விளக்குகள் நட்சத்திரங்கள் போன்ற விளக்குகள் ஒளி வீசுவதைக் காணுகிறோம். இந்தமாதிரி தமிழ் நாட்டில் மின்சக்தி பரவி விளங்குகிறது. குறிப்பாக, மத்திய அரசாங்கத்தில் ஒதுக்கப்பட்டுள்ள தொகையும், பெருமளவில் 30

கோடி ரூபாயை மூன்ருவது திட்டகாலத்திற்கு ஒதுக்கப்பட்டிருப் பதையும் அதைச் செலவு செய்ய திட்டம் வகுத்திருப்பதையும் நாம் போற்ருமல் இருக்கமுடியாது. குறிப்பாக இந்தக் காரியங்கள் செய்யும்போது கொஞ்சம் தடைகள் ஏற்படலாம். கொஞ்சம் நிதானமாக செய்யக்கூடியதாக இருக்கலாம். இந்த சந்தர்ப்பத்தில் அமைச்சர் அவர்களுக்கு நான் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். சேலம் ஜில்லாவில் தர்மபுரி தாலுகா என்பது மிகவும் பிற்போக்கான தாலுகா. அத்தாலுக்காவில் பெண்ணுகரம் தொகுதி மிகவும் பிற்போக்கான தொகுதி. காடுகள் வனுந்திரங்கள் அங்கு அதிகம். அங்கு துஷ்ட மிருகங்களும் அதிகம். அங்கு பற்பல இடங்களில் கிராமவாசிகள் மிக சிரமத்துடன் இருண்ட இடங்களில் இருக்கும்படியான நிலைமையில் இருந்துவருகின்ருர்கள். அந்தமாதிரி இடங்களை முதலில் கவனித்து அங்கு முதல் சலுகை கொடுத்து மின்சக்தி ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று தெரிவித்துக்கொள்கிறேன். அதோடுகூட இந்த மின்சக்தி ஏற்படு வதற்குத் திட்டங்கள் வகுத்து அதைச் செய்யவேண்டுமென்று முன்வந்தாலும், குறித்த நேரத்தில் குறிப்பிட்ட காலங்களில் அவர் களுக்கு வேண்டிய தளவாடங்கள் சரியான வகையில் கிடைப்ப தில்லை. மரங்கள் வெட்டி அதற்காக கம்பங்களையெல்லாம் கொண்டுவந்து போட்டுவிட்டாலும்கூட, விளக்கு எரிவதற்கு சில உப பொருள்கள், கருவிகள் கிடைப்பது இல்லை என்பதாகச் சொல்லி வேலை நடக்காமல் நின்று விடுகிறது. இந்த மாதிரிச் சில தவறுகள் சில சமயங்களில் ஏற்படுகின்றன. இந்தக் காரியங்கள் நடைபெருமல் இருக்கும் தடைகளை நீக்கி, சாமான்கள், கருவிகள் காலாகாலத்தில் கிடைக்கச் செய்யவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு எல்லோரும் இந்த விஷயத்தில் பாராட்டிப் பேசினுலும் நல்ல விஷயம் நன்ருக நடக்கிறது என்ற நிலையில் நானும் சில வார்த்தைகள் கூறி அதைப் பாராட்டி என் வார்த்தையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

*Sri K. V. RAMASWAMY: கனம் தலைவர் அவர்களே, இப்போது சர்க்காரால் கொண்டு வரப்பட்ட நமது எலக்ட்ரிஸிட்டி மானியத்தைப் பாராட்டி நான் பேச கடமைப்பட்டிருக்கிறேன். இது மிக முக்கியமான விஷயம். கரண்ட் என்பது எல்லோரும் பாராட்டக்கூடிய ஒரு விஷயம். அதிலும் விவசாயிகளுக்கு இது ரொம்ப முக்கியத்துவம் வாய்ந்தது. இன்று விவசாயம் செய் வதற்கு கரண்ட் இல்லையென்ருல் இன்றைய நிலைமையில் விவ சாயம் செய்யவே முடியாது. அதிலும் எங்கள் கோவை ஜில்லாவில் நீங்கள் பார்த்தால் இரண்டு பம்பு செட்டுகள் வைத்துத்தான் தண்ணீர் எடுக்கவேண்டும். கீழே ஒரு பம்புசெட் வேலை செய்யும். அதை மேலே எடுத்து ஊற்றுவதற்கு இன்னெரு பம்புசெட்டு வேலை செய்துகொண்டிருக்கும். இந்த நிலைமையில் எவ்வளவு ஆழத்திலிருந்து தண்ணீர் எடுக்கிருேம் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். இப்போது எலக்ட்ரிசிட்டி என்று ஒன்று இல்லாவிட்டால், விவசாயி என்ன செய்வான் என்று சொல்லமுடியாது. கபலை போட்டு இறைப்பது என்ருல்

பெரிய பெரிய மாடுகள் வைத்து—சுமார் ஒரு ஜோடி ரூ. 1,500-க்கு மேற்கொண்டு பெறுமானமுள்ள மாடுகள்—வைத்து இறைத்தால், ஒரு மணிக்கு எவ்வளவு தண்ணீர் எடுக்க முடியும் என்று யோசித்துப் பார்க்கவேண்டும், அதாவது, 100 அடிக்கு மேற்கொண்டு ஆழம் இருக்கக்கூடிய இடத்தில் ஒரு முறையில் 4 பக்கெட்டுகள் வந்துசேரும். அதுகூட நிலத்திற்குப் போய் சேருவதற்குள் வற்றிவிடும். இந்த நிலையில் தான் அங்கு இருந்து கொண்டிருக்கிறது. இப்போது கரண்ட் வந்தபிறகு, குடியானவர்களுக்கு நல்ல முறையில் விவசாயம் செய்ய முடிகிறது. அதிலும் சில கஷ்டங்கள் இருக்கத்தான் செய்கின்றன. விவசாயிகளுடைய வறுமையையும் சிரமங்களையும் கண்டு அதற்கான வசதிகள் செய்துகொடுக்கவேண்டும். அது அரசாங்கத்தின் கடமை. அதிலும் நமது மின்சார அமைச்சர் அவர்கள், நண்பர் திரு. சுப்பிரமணியம் அவர்கள் சொன்னது போல, கிராமம் கிராமமாகச் சென்று விவசாயிகளுடைய குறைகளை நன்றாகத் தெரிந்திருக்கிறார்கள். அதைப்பற்றி நான் அவர்களுக்கு அதிகமாக எடுத்துச் சொல்லவேண்டியதில்லை என்று நினைக்கிறேன். இருந்தபோதிலும் என்னுடைய கடமை நான் சொல்ல வேண்டியது. விவசாயத்திலே இன்றைக்கு இருக்கக்கூடிய நிலையில் விவசாயத் தொழிலாளர்கள் கிடைப்பது மிகமிக அரிதாக இருக்கிறது என்பதை நினைவுபடுத்த ஆசைப்படுகிறேன். நாம் இன்று விவசாயத்தொழிலை அபிவிருத்தி செய்வதுதான் முக்கியம். இன்று விவசாயத்திலே ஈடுபட்டிருக்கும் என் போன்றவர்களுக்கு அதன் கஷ்டம் நன்றாகத் தெரியவருகிறது. அதை இந்த சபை முன் சமர்ப்பிக்கக் கடமைப் பட்டிருக்கிறேன். அதற்குத் தகுந்த நடவடிக்கை எடுத்துக்கொள்ளாவிட்டால், விவசாயம் முன்னேற முடியாது. ஏன் அதைச் சொல்கிறேன் என்றால், இன்று விவசாயத் தொழிலாளர்கள் எந்த நிலைமையில் இருக்கிறார்கள் என்பதைச் சற்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். விவசாயத் தொழிலிலே இருக்கக் கூடிய ஒருவன் முன்பு நல்ல முறையில் வேலை செய்து கொண்டு வந்தான். இப்போது இந்த மாதிரி எல்லாம் இல்லை. அவர்கள் குறிப்பிட்ட நேரம்தான் வருவார்கள். குறிப்பிட்ட நேரப்படி கூட வருவதில்லை. 8 மணி என்றால் 9-க்கும், 9 மணி என்றால் 10-க்கும் வருவார்கள். ஏன் இப்படி நேரம் கழித்து வந்தாய் என்றால், அடுத்தநாள் வரவேமாட்டான். பண்ணையிலே மாதச்சம்பளத்தில் அமர்த்தக்கூடியவர்களுக்கு மாதம் குத்தகையாக இவ்வளவு படி, பணம் என்று பேசி அமர்த்துகிறோம் என்று சொன்னால், அவனுக்கு ரூ. 200 அட்வான்சாகக் கொடுக்கவேண்டும் முதலிலே. அடுத்தபடி அவனுக்கு ஒருமாடு வைத்துக் கொள்ளுவதற்கு வசதி வேண்டும். நம் மாட்டுக்குத் தீனி இல்லா விட்டாலும், அவன் மாட்டுக்குத் தீனி போட்டுக் கொள்ளுவான். இந்த நிலைமையிலே இருந்து கொண்டிருக்கிறது. அதேபோல் தினசரிக் கூலி ஆட்களின் நிலைமை எப்படி இருக்கிறது என்று சொன்னால், அது நாளுக்கு நாள் மோசமாகிக்கொண்டு வருகிறது. கூலியும் ஏறிக் கொண்டு வருகிறது. காரணம் ஒவ்வொருவரும் மற்ற

4-00 p.m.

23rd August 1961] [Sri K. V. Ramaswamy]

தொழில்களில் ஆர்வம் காட்டுகிறார்களே தவிர, விவசாயத்தை நாடுவதில்லை. மில்லுக்குப் போனால் அதிகமாகக் கூலி கொடுக்கிறார்கள். மில் கேட்டிலே 'வாச்மேன்' வேலையானால்கூட, நிறையச் சம்பளம் கிடைக்கிறது. விவசாயக் கூலியாகப் போனால், ரூ. 1¼, 1½ இப்போது ரூ. 1¾ வரை கூலி. அந்தக் கூலிகளை எல்லாம் கொடுத்துக் கணக்குப் பார்த்தால், ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. இன்றைக்குப் பெண் தொழிலாளிகள் காலை 7½ மணிக்கு வருகிறார்கள். ஒரு மணிக்கு அவர்கள் வேலையை முடித்து விடுகிறார்கள். கூலி ஒரு ரூபாய். இதற்கிடையில் சாப்பாட்டுக்கு 1 மணி நேரம். நடுவிலே 1-க்கு, 2-க்கு வெற்றிலை போட வீண் பேச்சு பேசுவது வேறே. இதை எல்லாம் வைத்துக் கொண்டு எவ்வளவு நேரம் வேலை செய்வார்கள் என்று கணக்குப் போட்டுக்கொள்ளுங்கள். ஒரு மணிச்சங்கு ஊதினால், அப்படியே வைத்துவிட்டுப் போய்விடுவார்கள். பிறகு வேலைக்கு ஆள் இல்லை. இந்த மாதிரியான நிலைமை இப்போதும் இருந்து கொண்டிருக்கிறது. விவசாயக் கூலிகள் அதிகமாகக் கிடைக்க முடியாத நிலைமையில் கஷ்டப்பட்டுக் கொண்டு இருக்கிறபடியால், விவசாயம் வளர முடியாது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்த நிலைமையில் இரவு நேரத்திலே வேலை செய்வது என்று சொன்னால் எந்தத் தொழிலாளி வந்து வேலை செய்வான் என்பதுதான் விளங்கமாட்டேன் என்கிறது. இரவிலேதான் தண்ணீர் பாய்ச்ச கரண்ட் சப்ளை செய்ய முடியும் என்றால், எப்படி, யார் போய் வேலை செய்கிறது, மாட்டுக்குத் தீனி போடக்கூட அவனவன் கிட்டே இருந்து கொண்டு வேலைசெய்தால் தான் முடிகிறது. இல்லாவிட்டால் மாடு வயிறு நிறையாது. மாடு வைத்துக் கொள்ள முடியாது. விவசாயிகளின் நிலைமை இம்மாதிரி இருக்கிறது. இந்தத் தண்ணீர் இறைவைக்குக் கரண்ட் பகலிலே கொடுக்கவேண்டும். இரவிலே கொடுப்பதால் பல கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. ஏதாவது ஒரு ஆள் வேலை செய்ய வந்தால்கூட அவன்கூட தண்ணீரை வெட்டி விட்டு தூங்குவான். "ஏன் தூங்கினாய்" என்று கேட்டால், "தூங்காத ஆளைப் போட்டுக் கொள்" என்று போய் விடுவான். அடுத்தநாள் அந்த ஆளும் இல்லை. இந்தமாதிரி நிலைமைதான் விவசாயத்தில் இருக்கிறது. ஆகவே நான் மதிப்பிற்குரிய அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். மற்றத் தொழில்கள் இரவில் லைட் போட்டுக்கொண்டு செய்யலாம். இரவிலே விவசாயத்தில் பயிருக்குள்ளே போய்த் தண்ணீர் கட்டுவது என்றால், முடியாத காரியம் கட்டுவதற்கும் வசதி இல்லை. அந்த நிலைமையிலே இருக்கிற காரணத்தால் விவசாயிகளுக்கு அத்தியாவசியமாகப் பகலிலே தான் அந்த கரண்ட் சப்ளை செய்ய வேண்டும் என்று மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, விவசாயிகளுக்குச் சில இடங்களில் தண்ணீர் இருக்கிறது, சில இடங்களில் தண்ணீர் இல்லாமல் இருக்கிறது. தண்ணீர் இல்லாவிட்டாலும் மினிமம் சார்ஜ்

கட்டியாக வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொரு பட்ஜட் போதும் சொல்லிக் கொண்டு வருகிறேன். நான் அனுபவத்தில் காட்டிக்கொண்டு வருவதைச் சொல்லிக் கொள்ளுகிறேன். கிணற்றில் தண்ணீரை வைத்துக் கொண்டு ஓட்டாமல் இருக்கவேண்டுமென்ற அபிப்பிராயம் இல்லை. ஒரு பொட்டுத் தண்ணீர் இருந்தால்கூட அதை உறிஞ்சி உறிஞ்சி கரண்ட் இருக்கிற வரைக்கும் இழுக்கிறோம். ஆனால் கரண்ட் சப்ளை இருந்தும்கூட தண்ணீர் இல்லை. மினிமம் சார்ஜ் கட்டியாக வேண்டும். இது ரொம்ப அநியாயம். ஏனென்றால் கீழே இன்னும் ஆழமாக வெட்ட முடியாது. பெரும்பாறை பக்கத்திலே பணக்காரர் ஏக ஆழத்துக்கு வெட்டியிருப்பார். அவ்வளவு ஆழமாகத் தோண்டமுடியாது. இந்த நிலைமையில் கரண்ட் சார்ஜ் கட்டியாக வேண்டும் என்றால் என்ன செய்வது என்றே விளங்கவில்லை. என்ன செய்வது என்று ஆண்டவன்கிட்டே நான் முறையிட்டுக்கொண்டு இருக்கிறேன்.

THE HON. SRI V. RAMAIAH : எங்களிடம் சொல்லுங்கள்.

SRI K. V. RAMASWAMY : மந்திரி அவர்கள் இடமும் சொல்லி இருக்கிறேன். இந்தமாதிரிப் பல கஷ்டங்கள் இருந்து கொண்டிருக்கின்றன. மினிமம் சார்ஜ் என்பதை அறவே ஒழிக்க வேண்டும். ஏனென்றால் தண்ணீர் இருந்து ஓட்டாமல் இருந்தால், மினிமம் சார்ஜ் வாங்கவேண்டியது அவசியம். கஷ்டப்பட்டு கடன் வாங்கி, கிணறு வெட்டி, இருக்கிற தண்ணீரை உபயோகப் படுத்தாமல் இருக்கிறது கிடையாது. ஆகையினால் இந்த மினிமம் சார்ஜை அறவே ஒழித்துக் கட்ட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடி, மற்றத் தொழிற்சாலைகளுக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிற யூனிட் சார்ஜைவிட விவசாயிகளுக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிற சார்ஜானது அதிகமாக இருக்கிறது. ஏன் இந்த ஒரு குறை? பக்கத்திலே மில் தொழிற்சாலையில் இருக்கக்கூடிய ஒருவருக்கு 5 பைசா போட்டு, இவர்களுக்கு 9, 10 பைசா போட்டால், நமக்கு அதிகமாகப் போட்டுவிட்டார்கள். அவர்களுக்கு குறைவாக இருக்கிறது என்ற மனப்பான்மைதான் வருமேதவிர, அவர்களுக்குச் சந்தோஷம் இருக்காது. விவசாயத்தை வளர்க்க வேண்டும் என்ற எண்ணம் கொண்ட நம்முடைய சர்க்கார், விவசாயத்துக்குக் கொஞ்சம் அதிகமாகக் குறைத்து, மற்றத் தொழில்களுக்கு அதிகமாகப் போட்டாலும் பரவாயில்லை என்பதுதான் என் தாழ்மையான அபிப்பிராயம். அந்த முறையிலே சர்க்கார் வேண்டுவன செய்ய வேண்டுமென்று வேண்டுகின்றேன்.

இன்னொரு குறை முக்கியமாக கவனிக்க வேண்டியது என்னவென்றால், கரண்ட் ஒரு கிராமத்துக்குப் போகிறது என்றால், அந்தக் கிராமத்திலே எப்படிப் போய்ச் சேருகிறது, சப்ளை எப்படி வருகிறது என்றால், ஒருத்தனுக்கு சப்ளை வருகிறதற்குள்ளே எவ்வளவு பணம் செலவழிக்கிறான், யார் யாருக்குச் செலவழிக்கிறான் என்பதை அலசி அலசிப் பார்த்தாக வேண்டும். இது

23rd August 1961] [Sri K. V. Ramaswamy]

ரொம்பக் கேவலமாக இருக்கிறது. நம்முடைய சர்க்காருக்கே இது அவமானமாக இருக்கிறது. ஏன் என்று சொன்னால், நம் சர்க்கார் நடக்கிற இடத்தில் சர்க்கார் ஊழியன் லஞ்சம் வாங்கி இந்தத் தொழிலைச் செய்கிறான் என்றால், அதைக் கண்டிப்பாகக் கண்டு பிடித்தாகவேண்டும். இதனால் என்ன நஷ்டம் வந்தாலும், பாதுகாப்புக்கு ஏற்பாடு பண்ணிப் பிடிப்பதற்கு அதிகச் செலவு செய்தாலும் பரவாயில்லை. மக்கள் சர்க்கார் நேர்மையாக நின்று, லஞ்சலாவணம் நின்று போய்விட்டது என்ற புகழை எடுத்துக் கொள்ள வேண்டும். யாரைக் கேட்டாலும், எதற்குப் போனாலும், "சும்மா வந்து, வரலையா, வரலையா என்று கேட்டால் என்ன செய்வது"— இந்த மாதிரி அசிங்கமான முறைகள் நடைபெற்றுக்கொண்டு வருகிறது. சகிக்க முடியாமல் நான் பேசுகிறேன். நாம் எல்லாம் அதிகாரம் வாங்கியது எதற்காக? சுதந்திரம் பெறப்பட்ட கஷ்டம் என்ன? மக்கள் சுபிட்சமாக வாழ வேண்டுமென்று பெற்றோம். சுதந்திரமான நாட்டிலே சில ஊழியர்கள் சட்டத்தை மீறி, சர்க்காரை மீறி அவமதித்து தங்களுடைய வாழ்க்கையை ஒரு சின்னமாக எண்ணாமல் ஏதோ ஒரு மிருகத்தனமான முறையில் நடந்து கொண்டு இருக்கிறார்கள் என்றால், அதைக் கண்டிக்காமல் இருந்தால் நாம் சட்டசபையில் இருந்து பிரயோசனம் இல்லை. ஆட்சி புரிந்து பிரயோசனம் என்ன என்று எனக்கு விளங்கவில்லை. இதைக் கண்டிப்பாக இந்த நாட்டிலே இருந்து அறவே ஒழித்தாக வேண்டும். இது மிக முக்கியம். இதைப்பற்றி ஜோசியம் கேட்க வேண்டாம். கண் முன்னாலே நடக்கும் காரியம். ஒவ்வொரு இடத்திலேயும் நடக்கிறது. நம் சர்க்கார் என்று மறைத்து வைத்தும் பேச முடியாது. ஆகவே, இந்த விஷயத்திலே அதிகமான கவனம் செலுத்தி பரிகாரம் தேடிக்கொடுத்தாகவேண்டுமென்று பணிவன்புடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இதேபோல் 4-10 p.m. சில இடங்களில் கரண்ட் கம்பங்கள் நட்டு வெகுகாலமாக இருக்கின்றன. அதில் சில இடங்களில் கரண்ட் கொடுக்காமல் கூட இருந்துகொண்டிருந்தது. அப்படியிருந்த கிராமங்களுக்கு மந்திரி அவர்கள் போய்ப் பார்த்து உடனடியாக உதவி செய்ததைப் பற்றிக் கேள்விப்பட்டோம். இப்போதெல்லாம் அங்கு போனால் ராமையா என்று சொன்னதுமே, 'வாருங்கள் ஐயா' என்று கூறும் நிலைமையில் அவர்கள் சந்தோஷமாக இருக்கிறார்கள். அதைக் கண்டு நாம் பெருமைப்படாமல் இருக்கமுடியவில்லை. ஆகையால் இப்போதுள்ள இந்தக் குறைபாடுகளையெல்லாம் அவர்கள் காலத்திலேயே நீக்குவார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது என்பதைப் பணிவன்புடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதைப்போல எலக்ட்ரிக் சாமான்கள் விவசாயிகளுக்கு நல்லபடியாகக் கிடைப்பதில்லை. ஆகையால் சர்க்காரிலிருந்து கூட விவசாயிகளுக்கு நல்ல முறையில் அந்த சாமான்களை வாங்கிக்கொடுத்து உபயோகிக்கச் செய்தால், ரொம்ப சௌகரியமாக இருக்கும். கிராமத்திலிருந்து போகும் ஒருவன் கடையில் போய் ஒரு சாமானுக்கு என்ன விலையென்று கேட்டால், அவர்கள் சொன்ன விலையைத்தான் பேசாமல் கொடுத்துவிட்டு வரவேண்டியதாக இருக்கிறது. அவனுக்கு

மார்க்கெட் விலை தெரியாது. அவனுக்கு வேலை அவசரம். ஆகையால், சர்க்கார் குடியானவர்களுக்கு வேண்டிய மிக முக்கியமான பொருள்களை, சர்க்கார் கிடங்குகள் ஏற்படுத்தி, அதன்மூலம் கொடுத்து உதவ வசதிகள் செய்தால், குடியானவன் கஷ்டம் ஓரளவு நிவர்த்தியானதாகக் கருதப்படும். மேலும் பகலும் இரவும் விவசாயிகளுக்குக் கரண்ட் அவசியம். பகல் நேரத்தில் கரண்ட் கொடுப்பது மிக அவசியம். இரவில் கொடுப்பது என்று சொன்னால், நெல் வயல்களாக இருந்தால் மடை திறந்ததும் நீர் பாய்ந்துகொண்டு இருக்கும். மற்ற தானியங்களுக்கு ஒரு பாத்திக்கு ஒரு மடை பார்த்தாகவேண்டும். இருண்ட நேரத்தில் விவசாயி அதைப் போய் நீண்ட பயிருக்குள் பார்த்து எப்படி நீர்ப் பாய்ச்ச முடியும்? கரும்பு முதலிய பயிர்கள் உள்ள இடங்களில் உள்ளே போய் இரவில் தண்ணீர் பாய்ச்சுவது கஷ்டமான காரியம். இப்போது ஸ்பெஷல் சர்சார்ஜ் மூன்று மாதத்திற்கு முதலிலேயே கொடுக்கவேண்டுமென்றும் மிகவும் சிக்கலாகவும் நிர்வாகத்தை வைத்துக்கொண்டிருந்தால் விவசாயி என்ன செய்வான்? ஆபீஸ்களில் போய் நின்றுகொண்டு சாப்பாடு இல்லாமல் வெயிலிலும் மழையிலும் காத்துக்கொண்டு இருப்பதைப் பார்த்தால், அந்தக் கஷ்டத்தை நம்மால் சொல்லவே முடியாது. அதைப் போக்க வேண்டும். இதுபோன்ற வசதிகளைச் செய்துகொடுத்து விவசாயினுடைய குறைகளைப் போக்கி அவர்களுக்கு உதவவேண்டுமென்று சொல்லி எனக்குப் பேச வாய்ப்பளித்த தலைவர் அவர்களுக்கு நன்றி கூறி முடித்துக் கொள்ளுகிறேன்.

* Sri M. ETHIRAJALU: சேர்மென் சார், மின்சார வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். நான் சர்க்காருக்கு நன்றி தெரிவிப்பதற்கு முன்னதாக நமது ராஜ்யம் இவ்வளவு தூரம் முன்னேறியிருப்பதற்கு உதவி செய்த கனடா சர்க்காரையும் சோவியத் யூனியன் சர்க்காரையும் பாராட்ட வேண்டியது நம் கடமையாகும். அது நமது சட்ட மன்றத்தின் கடமையும் கூட. ஏனென்றால் குந்தா மின்சாரத் திட்டம் முதல் இரண்டு கட்டங்களும் முடிவடைவதற்கு வேண்டி ரூ. 12 கோடியும் கொடுத்து, மூன்றாவது கட்டத்திற்கு ரூ. 11 கோடியும் இப்போது கொடுப்பதற்கு கனடா சர்க்கார் முன்வந்திருக்கிறது. அதே நேரத்தில் மேட்டூர் டன்னல் மின்சாரத் திட்டத்தை அமைப்பதற்கு சோவியத் யூனியன் சர்க்கார் முன்வந்திருப்பதை நாம் பாராட்டவேண்டும். அவர்களுடைய முழு ஒத்துழைப்பினால் தான் நமது மாநிலம் இன்றைக்கு மின்சார உற்பத்தியில் இந்தியாவிலேயே மூன்றாவது இடத்தைப் பெற்றிருக்கிறது. என்றாலும் கூட மற்ற மாநிலங்களைவிட கிராமத்தில் மின்சாரம் கொடுத்திருப்பதில் தமிழ்நாட்டு அரசாங்கம்தான் முதல் ஸ்தானம் பெற்றிருக்கிறது. இந்த மின்சார பட்ஜெட்டைப் பார்க்கும்போது, சென்ற ஆண்டு நாம் எடுத்துச் சொன்ன கருத்துக்களையெல்லாம் மனதில் கொண்டுதான் இந்த வருஷம் விவசாயிகள் முன்னேற்ற அடிப்படையிலே, இந்த ரிபோர்ட் நல்ல முறையில் தயாரிக்கப்பட்டு அமுல்

23rd August 1961] [Sri M. Ethirajalu]

நடத்தப்பட்டு வருகிறது என்பது நன்ருகத் தெரிகிறது. விவசாயி களுக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய நன்மைகளை முதலாவதாக எடுத்துக் கொண்டு பார்த்தால், எத்தனையோ கஷ்டங்கள் அவர்களுக்கு இருந்தாலும்கூட, ஓரளவு காலதாமதம் ஏற்பட்டிருந்தாலும்கூட, மின்சாரத் துறையில் ஏற்பட்டிருக்கிற நன்மைகளைப் பெற்று அதன் மூலமாக சுபிட்சப் பாதையில் செல்வதற்கு அது உதவு கிறது. குறிப்பாக இப்போது டிஸ்ட்ரிபியூட்டிங் மெயினிலிருந்து 100 அடிக்கு அப்பாற்பட்ட இடத்திற்குக் கனெக்ஷன் கொடுக்க வேண்டுமென்ருல் இலவசமாகக் கொடுக்கப்படுகிறது. விவசாயி கள் கிணற்றில் தண்ணீர் இல்லையென்ருல், அதற்கு மினிமம் சார்ஜ் கட்டவேண்டுமென்று முன்னிருந்தது. அதை அனுபவத்தில் பார்க்கும்போது, அதற்குக்கூட ஒரு விசேஷத் தொகை தள்ளுபடி செய்யக்கூடிய நிலையில் மின்சார இலாகா முன் வந்திருக்கிறது என்பது பாராட்டத் தக்கது. கிணற்றில் தண்ணீர் வறண்டுபோய் முழு அளவுக்கு மின்சாரம் உபயோகிக்காவிட்டாலும்கூட, அதற் கும் விசேஷத் தொகை தள்ளிக் கொடுக்கிருர்கள். மின்சாரம் சரியாகக் கிடைக்காமல், பம்பு செட்டை எடுத்துவிட்டபின்கூட, கனெக்ஷன் ரத்து செய்யப் படுவதில்லை. இப்படி மின்சாரத்துறை விவசாயிகளுக்கு நல்ல முறையில் செயலாற்றி வருகிறது என்பதை நாம் மறக்கமுடியாது. அதுமட்டுமல்ல. இன்றைக்கு இருக்கும் அட் ஹாக் கமிட்டி மூலமாக வந்த ரிபோர்ட்படி குரூப்பிங் சிஸ்டம் விவசாயிகளுக்குக் கஷ்டம் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது என்று அறிந்து அதை நீக்குவதுபற்றி அமைச்சர் அவர்கள் குறிப்பிட் டிருக்கிருர்கள். இராமநாதபுரம் ஜில்லாவில் விவசாயிகளுக்குக் கஷ்டம் ஏற்படுகிறது என்று குரூப்பிங் சிஸ்டத்தை எடுத்துவிட் டார்கள். அதேபோல சேலத்திலும் குரூப்பிங் சிஸ்டம் நீக்கப்பட் டுள்ளது. அதனல் இருந்த கஷ்டங்கள் விவசாயிகளுக்குக் குறைந்திருக்கிறது. அட் ஹாக் கமிட்டி சொல்லியிருக்கும் மின் சார வசதியில்லாத பின்தங்கிய ஜில்லாக்களுக்கு இப்போது என்ன சலுகைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன, அட் ஹாக் கமிட்டி என்ன ரிபோர்ட் கொடுத்திருக்கிறது என்பதை அமைச்சர் அவர்கள் பதிலில் சொல்வார்கள் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 6 கோடி ரூபாய் வருட வாரியாகச் செலவு செய்தார்கள். இரண்டாவது திட்டத்தில் ரூ. 15 கோடி வருடவாரியாகச் செலவு செய்திருக்கிருர் கள். இரண்டாவது திட்டத்தில் ரூ. 15 கோடி செலவு செய்து தான், ஏறக்குறைய 3,500 கிராமங்களிலிருந்து 10,700 கிராமங்கள் வரை மின்சாரம் கொடுத்திருக்கிருேம். மேற்கொண்டு 8,000 கிராமங்களுக்கு மூன்ருவது திட்டத்தில் மின்சாரம் விஸ்தரிக்கப் படுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதை நாம் நடைமுறை யில் பார்க்கிருேம். பம்புசெட் விஷயத்தில்கூட இரண்டாவது திட்ட முடிவில் 1,16,000 செட்டுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மூன்ருவது திட்டத்தில் 75,000 பம்புசெட்டுகள் கிடைக்குமென்றும், 8,000 மைல்களுக்கு ஹைடென்ஷன் லைன்கள் அமைக்கப்

படுமென்றும், உறுதி கூறப்பட்டிருக்கிறது. இதுபோன்று தமிழகத்தில் மின்சாரம் மின் வேகத்தில் போய்க்கொண்டிருக்கிறது. இன்னும் மூன்ருவது திட்டத்தில் முக்கியமாக மேட்டூர், டன்னல் மின்சாரத் திட்டம், ஆரளியாறு பரம்பிக்குளம் திட்டம்
4-20 p.m. எல்லாம் எடுத்துக் கொள்ளப் போகிறோம். அப்படி எடுத்துக் கொண்டாலும் பற்ருக்குறை வந்துகொண்டே இருக்கிறது. வருஷவாரியாக கோடை காலத்தில் வந்துகொண்டிருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முதலில் 5 லட்சம் கிலோவாட்தான் உற்பத்தி செய்ய முடிந்தது. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இன்னும் 5 லட்சம் கிலோவாட் உற்பத்தி செய்ய முடியும். பத்து லட்சம் கிலோவாட் உற்பத்தி செய்தாலும்கூட, பற்ருக்குறை இருந்துதான் தீரும் என்று அமைச்சரே சொல்லியிருக்கிருர்கள். அதே நேரத்தில் தமிழ் நாட்டில் தென் ஆற்காடு ஜில்லாவில் நெய்வேலியில் தெர்மல் ஸ்டேஷன் மின்சக்தி உற்பத்தி செய்கிற நேரத்தில் 2½ லட்சம் கிலோவாட் உற்பத்தி செய்யும் என்று சொன்னர்கள். ஆனல், இப்போது 4 லட்சம் கிலோவாட் உற்பத்தி செய்ய முடியும் என நம்பப்படுகிறது. எடுத்துக்கொண்ட பிறகு மீதி 2·16 லட்சம் கிலோவாட் தமிழ் நாட்டுக்குக் கொடுக்க முடியும் என்று சொல்லுகிற நேரத்தில், நாம் ஓரளவு பற்ருக்குறையை சமாளிக்க முடியும் என்று உறுதி கூறப்படுகிறது. ஆகவே, நமது தமிழ் நாட்டின் இன்றைய பற்ருக்குறை வருஷவாரியாக நீக்கப்படும் என்பதிலே இந்த இலாகாவைப் பொறுப்பு வகிக்கும் அமைச்சரவர்கள் எடுத்துக்கொண்டிருக்கிற முயற்சியை ஓரளவுகூட சந்தேகிக்க வேண்டியதில்லை. ஏனைய ராஜ்யங்களைவிட இந்த ராஜ்யத்திலே மின்சாரத்துறை சிறந்த முறையில் நடக்கிறது என்பதை யாரும் எந்தக் கட்சியினரும் மறுக்க முடியாது. ஆனல், அதே நேரத்தில் இந்த இலாகாவினரால் விவசாயிகளுக்கு ஒருசில கஷ்டம் இருக்கலாம். எந்த இலாகாவிலும் இதேமாதிரி இருக்கிறது. ஆனல் இது அன்ருடத் தேவைக்கு ஒவ்வொரு விட்டாருக்கும் உபயோகப்படுகிற இலாகாவாகப் போய் விட்டது. விரிவான அளவில் அது எல்லோருக்கும் தெரியும் நிலையில் வந்துவிட்டது. அதை எல்லாம் அவ்வப்போது கண்டு சீர்திருத்த வேண்டியது இலாகாவினரின் பொறுப்பு. மற்ருெரு விஷயம்கூட இருக்கிறது. அதைக் கொஞ்சம் கொஞ்சமாக நீக்கிவிடவேண்டும். இதை ஒரு கார்ப்பொரேஷனுக்கி இருக்கிறது. சர்க்காருக்கும் கார்ப்பொரேஷனுக்கும் நெருங்கிய உறவு இல்லாத காரணத்தால் எப்படி வேண்டுமானலும் நடக்கலாம் என்று அதிலே வேலை செய்பவர்கள் நினைக்கலாம். அப்படி நினைப்பது தவறு. அதேபோல் கம்பெனியில் வேலை செய்தவர்களுக்கும் இருந்தது. கம்பெனியை எடுத்து கார்ப்பொரேஷனுக்கு மாற்றிய பிறகு அந்த எண்ணம் மாறி எவ்வளவு சலுகை இருந்ததோ அதை மறந்து சேர்ந்து விட்டதைப் போல அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இப்போது இன்னும் சில கம்பெனிகளுக்கு, கிராமங்களுக்கெல்லாம் மின்சாரத்தைப் பெருக்கவேண்டும் என்று ரூ. 20, 25 லட்சம் என்று

23rd August 1961] [Sri M. Ethirajalu]

கொடுக்க வேண்டுமென்று இந்த வரவு செலவு திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. முன்னதாகவே கேட்டுக்கொண்டிருக்கிறோம். கொஞ்சம் கொஞ்சமாக இப்போது இருக்கக் கூடிய எட்டு கம்பெனிகளையும் எடுத்து மின்சார இலாகாவில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஏனென்றால் அவர்கள் ஏகபோக பாத்தியமாக நடக்கிறார்கள். அவர்கள் பொது ஜனக் குறைகளைக் கவனிப்பதில்லை. குறைகள் கவனிக்கப்பட வேண்டுமானால், கம்பெனிகளைப் படிப்படியாக எடுத்துவிட வேண்டும். கம்பெனிகள் இருக்கக்கூடாது என்பதுதான் என் கோரிக்கை. அதோடுமட்டுமல்ல குரூபிங் சிஸ்டத்தில் இருக்கக் கூடிய கஷ்டத்தைத் தெரிந்து கொண்டிருக்கிறபோது பின்தங்கிய ஜில்லாக்களில் கூட உடனடியாக அமுலுக்குக் கொண்டுவர வேண்டும்.

THE HON. SRI V. RAMAIAH : குரூபிங் சிஸ்டம் வேண்டுமா ?

SRI M. ETHIRAJALU : அதை எடுத்துவிட வேண்டும் என்றுதான் நானும் கேட்டுக்கொள்ளுகிறேன். நமது மாநிலத்தில் தென் ஆற்காடுதான் கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப்படுவதில் மிகவும் பின் தங்கி இருக்கிறது. சென்ற வருஷத்தில்கூட எடுத்துக் காட்டினேன். இப்போது என்னிடம் அதற்கான புள்ளிவிவரம் இல்லை. அப்போது சொல்லியிருக்கிறேன், தனி கவனம் செலுத்தப்படும் என்றும் விசேஷச் சலுகை தென் ஆற்காடு ஜில்லாவுக்குக் காட்டப்பட வேண்டுமென்றும் சொல்லியிருக்கிறேன். ஏனென்றால் இப்போது மதுரை, கோயம்புத்தூர், திருச்சி போன்ற ஜில்லாக்களில் எல்லாம் 900, 1,000 கிராமங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. சென்ற வருஷத்தில் அதே நேரத்தில் தென் ஆற்காட்டில் 500, 550 கிராமங்களுக்குத்தான் கொடுக்கப்பட்டது. அதற்குப் பிறகு சென்ற வருஷத்தில் ஏதாவது ஒருக்கால் அதிகமாக இருந்தால் இருக்கலாம். விசேஷ கவனம் செலுத்தி இருக்கிறார்களா என்று கேட்க ஆசைப்படுகிறேன். அதோடு மற்றொன்று, தென் ஆற்காடு ஜில்லா விவசாயிகளுக்கு ஒருகுறை. நேற்றைய முன்தினம் விழுப்புரம் தாலூகாவிலிருந்து ஒருவர் என்னிடம் முறையிட்டார். குமினம் என்று ஒரு சிறிய கிராமம், அதில் 200, 300 பம்ப் செட்கள் மின்சாரத்துக்குத் தகுதியுள்ளதாக இருக்கின்றன. அதைக் கவனிக்கவில்லை. இரண்டு, மூன்று வருஷம் ஆகிறது. குறைகள் கவனிக்கப்படவில்லை என்று குறை கூறினார்கள். அமைச்சர் அவர்களுக்கும் தெரியும் என்று நினைக்கிறேன். அதிலும் சீக்கிரம் உடனடியாக கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

கடைசியாக, வீடுகளுக்குக் கொடுக்கும் மின்சார கனெக்ஷன் இருக்கிறதே, அதிலும் சென்னையில் இருப்பதற்கும் வெளியே இருப்பதற்கு வித்தியாசம் இருக்கிறது. சென்னையில் ஒரு மாதம் பணம் கட்டத் தவறிவிட்டாலும்கூட, 2, 3, மாதம் கழித்துக்கூட கட்டுகிறார்கள். சர்வீஸ் கனெக்ஷன் நிறுத்தப்படுகிறது இல்லை. மொபசலில் இருக்கிறவர்களுக்கு யார் பேரில் வீடு இருக்கிறது,

யார் பேரில் கனெக்ஷன் இருக்கிறது, யார் பேரில் பில்போட வேண்டும் என்று இருக்கிறதோ அவர்களுக்குத் தெரிவிக்காமலேயே, ஏதாவது வழியில் இருக்கிறவர்களிடம் பில்லைக் கொடுத்து விட்டுப் போகிறார்கள். யாரிடமாவது கையெழுத்து வாங்கிக் கொள்ளுகிறார்கள். நான் நேரிலேயே சம்பந்தப்பட்டவர்களிடம் சொல்லியிருக்கிறேன். முதலில் கொடுக்க வேண்டிய நோட்டீஸ் கொடுக்கப்படாவிட்டாலும், கனக்ஷனை நிறுத்தப்போகிறோம் என்ற நோட்டீசையாவது அந்த வீட்டுக்கு உரியவர்களிடம் கொடுத்துக் கையெழுத்து வாங்கவேண்டும். அதுகூட கொடுப்பது இல்லை. திடீரென்று எரிகிற விளக்கை நிறுத்தி விடுகிறார்கள். விளக்கை ஏற்றுவது ரொம்பக் கஷ்டம், அணைப்பது சுலபம். வீட்டிலே விளக்கை நிறுத்தும்போது, சுலபமாக யாருக்கும் தெரியாமல் நிறுத்திவிட்டுப் போய்விடுவார்கள். இப்படிப் பல சம்பவங்கள் நடக்கின்றன. குறிப்பாக, தென் ஆற்காட்டில் கடலூர் நகரத்தில் இம்மாதிரி சர்வீஸ் கனெக்ஷன் நிறுத்தப்பட்டிருக்கிற வீடுகள் எவ்வளவு என்று பார்த்தால்கூட நன்றாக இருக்கும். நான் டிவிஷனல் எஞ்சினீருக்கு நேராக எழுதியிருக்கிறேன். கேள்வியாக இந்தச் சட்டமன்றத்தில் கேட்டிருக்கிறேன். ஏன் இதைச் சொல்லுகிறேன் என்றால், வீடுகளுக்கு ஒருமுறைக்கு மறுமுறை போய்ச் சொல்லியும், பணம் கட்டவில்லை என்றால் கனக்ஷனை துண்டிப்பதுதான் நியாயம். தொழில் துறையில் மின்சாரத்தைக் கேட்பவர்களுக்கு மொபசிலில் இருக்கிறவர்களுக்கு நல்ல முறையில் சீக்கிரம் கிடைக்கவில்லை என்ற புகாரும் இருக்கிறது. சிறிய தொழிலை, குறைந்த பணத்தை வைத்து, நடத்துகிறவர்களுக்குப் பல கஷ்டங்கள் இருக்கின்றன. ஆனால் ஒன்று சொல்லுவேன். சென்னையில் இருக்கக்கூடிய மின்சார எஞ்சினீயரிடம் சொன்னால், அவர்கள் உடனடியாக நடத்திக்கொடுக்க முயற்சி எடுக்கிறார்கள். இதில் சந்தேகம் இல்லை. ஆனால் அங்கே அவர்களுக்குக் கீழே இருக்கக்கூடிய இலாகாவினர்தான் இன்னமும் சரியான முறையில் நடக்காமல், எப்படி எல்லாம் பதில் சொல்லி தப்பித்துக் கொள்ள முடியுமோ அந்த முறையில் பதில் எழுதும் நிலையில் இருப்பதை எல்லாம் சீக்கிரத்தில் சரிப்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டு . . .,

**SRI O. P. RAMASWAMI REDDIAR** : அதெல்லாம் மின்சார போர்டு வந்ததால் வேறொன்றுமில்லை. அது ஸ்டாடியுடரி போர்டு.

**SRI M. ETHIRAJALU** : மின்சார போர்டு வேறு சர்க்கார் வேறு என்று நினைக்கக்கூடாது. அமைச்சர் அவர்கள் இதிலே எல்லா பொறுப்பையும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். மின்சாரத்தைக் கொடுப்பதன் மூலம் இந்தியாவிலேயே தமிழ்நாடு பெரும் புகழ் பெற்று இருந்தாலும்கூட, சர்க்கார் வேறு, போர்டு வேறு என்ற எண்ணம் மாறி இரண்டையும் ஒன்றாக நினைத்து வேலை செய்தாலொழிய குறைகள் தீராது. நெய்வேலி நிலக்கரி என்றால் தென் ஆற்காட்டு M.L.A., M.L.C. -க்களுக்கு சம்பந்தம் கிடையாது. போய் பேச, கேட்கக்கூட முடியாது.

23rd August 1961]

SRI O. P. RAMASWAMI REDDIAR : கவர்ன்மெண்டுக்கே கிடையாது, மற்றவர்களுக்கு என்ன ?

SRI M. ETHIRAJALU : முன்னால் அமைச்சர் உயர்திரு. ரெட்டியார் அவர்கள் நெய்வேலி பழுப்பு நிலக்கரி வரவேண்டும் என்று அக்கறை எடுத்துக்கொண்டவர்களுக்கே சம்பந்தம் இல்லை என்றால், அது கார்ப்பொரேஷன் we are under the control of the Central Government என்று சொல்லுகிறார்கள். நான் அதைப் பற்றிச் சொல்லவில்லை. அந்த நிலையில் அமைச்சரவர்கள் அரசாங்கமும் கார்ப்பொரேஷனும் ஒன்று என்ற முறையில் இந்த இலாகா நடக்கச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு மின்னல் வேகத்தில் மின்சாரத்தைக் கொடுத்து, தொழில் துறையிலேயும், ஊடுருவிப் பாய்ந்து இந்த இலாகா தகுந்த முறையில் வேலை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு நான் முடித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

* SRI G. KRISHNAMOORTHY : Mr. Chairman, Sir, these are days of development of electricity. Everybody wants electricity. In fact, electricity is called our servant. Government have also been taking steps to extend electricity. Now for me to speak about the disadvantages of electricity may seem curious to many. There are advantages, but, at the same time, there are some disadvantages—disadvantages in the form of risks and Government must take precautions against these. I have no quarrel with the issue of licences for pumpsets. But, at the same time, they should not go to such an extent as to create unemployment of men and bulls. We are closely following in the footsteps of Mahatma Gandhi and in order not to create unemployment for bulls and men and not to create unnatural circumstances like those described by the hon. Member Sri Ramaswamy like the necessity to water the fields at night and the scarcity of labour at night, I would request the Government to go slow. By that I mean that pumpsets need not be given to such places where water can be easily found at a low level. Only in places where water is found at a very deep level and where bulls cannot be used, pumpsets must be given. Otherwise, we will be facing a great consequence by way of unemployment for bulls and men very soon. 4-30 p.m.

Now, mainly I want to deal with the risks involved in using electricity. First of all, I would request the Government to see that they provide all their servants with necessary safeguards. We have heard of accidents, tragic accidents, where men working on overhead wires—some of our own brothers—had become martyrs in public service. I would like to know whether the Government, through the Electricity Board, have provided the necessary safeguards, necessary equipment to them, whether the servants have got necessary instructions to take these things with them when they go for such work, whether simultaneous work by two persons at two posts is allowed, and how this tragic accident occurred, especially to poor brothers when they were doing service to humanity.

